# *ஈசாவாஸ்ய உபநிஷதம்*

=====================

***"ஈசாவாஸ்யம் இதஹம் ஸ்ர்வம்"*** *என்ற மந்திரத்துடன் ஆரம்பிப்பதால் இது ஈசாவாஸ்ய உப நிஷதம் என்ற பெயர் பெற்றது.*

*இது 18 மந்திரங்களே உள்ள சிறிய உபநிஷதம்.*

*யஜீர் வேதத்தில் கிருஷ்ண யஜீர் வேதம், சுக்ல யஜீர் வேதம் என்று இரண்டு பிரிவுகள் உள்ளன. சுக்ல யஜீர் வேதத்தில் வாஜஸனேய சம்ஹிதையில் அமந்துள்ளது இந்த உபநிஷதம்.*

*இந்த சம்ஹிதையில் 40 அத்தியாயங்களில் கடைசி அத்தியாயம் இது. தத்யங் அதர்வணர் என்ற முனிவர் தனது மகனுக்கு இதனை உபதேசித்தார்.*

*அவன் ஆசைகள் அற்றவனாகவும் முக்தியில் தீவிர நாட்டம் கொண்டவனாகவும் இருந்ததால் அந்த முனிவர் அவனுக்கு இந்த உபநிஷதத்தை உபதேசித்தார்.*

*ஒளிக்கு அப்பாலுள்ள ஒன்றத் தேடும் முயற்சியையும், ஒளிக்கு அப்பால் என்ன உள்ளது*

*என்பதனையும் **"ஈச வித்யை"** என்று இந்த உபநிஷதம் கூறுவதே இந்த ஈசாவாஸ்ய உபநிஷத்தின் மைய கருத்து ஆகும்.*

*உபநிஷதங்கள் ரிஷிகளின் அனுபவ உண்மைகள். வெறும் படிப்பறிவு கொண்டோ, சம்ஸ்கிருதப் புலமை கொண்டோ அவற்றின் உண்மையான பொருளை அறிந்து கொள்வது என்பது சாத்தியம் அல்ல.*

*உண்மையான சாதனை என்பது மனத்தூய்மையுடன் நாம் இறைவனை நோக்கி முன்னேற முன்னேற இவற்றின் உட்பொருள் நமக்கு புரியும், மேலும் ஆழமாக இந்த மந்திரங்களின் பொருளை சிந்தித்து ஆன்மீக சாதனைகளில் ஈடுபட்டால்தான் உப நிஷதங்களை உண்மையாகப் புரிந்து கொள்ள முடியும்.*

*இந்த உலகம் ஈஸ்வரனால் வியாபிக்கப்பட்டுள்ளது ("ஈசாவாஸ்யம் இதம் ஸ்ர்வம்") என்று இந்த உபநிஷதம் துவங்குவதிலிருந்து ஈஸ்வரனுடைய ஸ்வரூபம் விளக்கப்படுகின்றது.*

*ஈஸ்வரன் இந்த உலகத்திற்கு நிமித்த காரணமாகவும் உபாதான காரணமாகவும் இருப்பதினால் உண்மையில் இந்த உலகமே ஈஸ்வரனாக இருக்கின்றது.*

*ஆகவேதான், ஈஸ்வரனால் இந்த உலகமே வியாபிக்கப்பட்டுள்ளது என்ற வாக்கியத்திலிருந்து ஈஸ்வரனுடைய தன்மை அறியப்படவேண்டும், அதாவது இந்த உலகத்தை உலகம் என்ற எண்ணத்தினை நீக்கி, ஈஸ்வரன் என்ற எண்ணத்தினை வைக்கவேண்டும் என்று பொருள் சொல்லப்படுகின்றது.*

*இவ்விதம் ஈஸ்வரனைப்பற்றிய ஞானத்தை கொடுத்து, தியாகத்தினால் உன்னை காப்பாற்றிக்கொள் என்றும், மற்றவர் பொருளுக்கு ஆசைப்படாதே! என்றும் இந்த உபநிஷதம் அறிவுறுத்துகிறது.*

*உண்மையில் ஈஸ்வரனாகவே எல்லாமாக இருக்கிறது. ஒரு மாடு தன்னைக் கண்ணாடியில் பார்த்துவிட்டு, இன்னொரு மாடு இருப்பதாக நினைத்து அதை முட்டப் போகிறது.*

*ஒரு மனிதன் தன் பிரதி பிம்பத்தைப் பார்க்கிறான். இன்னொரு மனிதன் இருக்கிறான் என்று அவன் நினைக்கிறானா?. இரண்டும் ஒரே பொருள் என்று நினைத்து அவன் சாந்தமாக இருக்கிறான். இப்படியாக நாம் பார்க்கிற அனைத்துமே ஒன்றுதான்.*

*இரண்டாவது என்று எண்ணினால்தான் ஆசை வரும். ஆசை வருவதினால் கோபம் வருகிறது. கோபம் வருவதினால் பாவங்களைச் செய்கிறோம்.*

*அதனால் ஜன்மம் உண்டாகிறது. எல்லாம் ஒன்று என்ற ஞானம் நமக்கு வந்துவிட்டால், வேறு பொருள் இல்லாததனாலே ஆசை இல்லை. பாவம் இல்லை. காரியம் இல்லை. ஜனனம் இல்லை. துன்பமும் இல்லை.*

*யாரால் இந்த ஞானத்திற்கு வருவதற்கும், தியாகத்திற்கும் தயாராக முடியவில்லையோ, அவர்கள் கர்மயோகப்படி வாழ்க்கையை மேற்கொள்ளப்படும்பொழுது, கர்மமானது அவர்களை பந்தப்படுத்துவதற்கு பதிலாக தகுதிப்படுத்துகிறது.*

*இவ்வாறு ஞான யோகத்தினையும் கர்ம யோகத்தினையும் கூறியபின் அறியாமையில் இருப்பவர்களுடைய நிலை பேசப்படுகின்றது.*

*அஞ்ஞானிகள் பிறந்து பிறந்து இறப்பதினால் அவர்கள் தங்களை தாங்களே அழித்துக்கொள்ள விரும்புகிறார்கள்.*

*பரப்பிரம்ஹ தத்துவமானது பிரம்மத்தில் ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களும் அவற்றின் தன்மைகளும் ஏற்றிவைக்கப்பட்டு, பிறகு உண்மையில் இவைகள் அனைத்தும் அற்றதாக பரப்பிரஹ்ம தத்துவம் விளக்கப்படுகின்றது.*

*மெய்பொருளைப் பற்றிய ஞானத்தை அடைந்தவன், தன்னையும் மற்ற உயிரினங்களையும் எவ்விதம்*

*பார்க்கிறான் என்ற ஞானியின் பார்வை கூறப்பட்டு, அவ்வித ஞானத்தின் பலனும் பேசப்படுகிறது.*

*மேலும் உடல்களும் அதன் தன்மையும் அற்றது ஆத்ம தத்துவம் என்று விளக்கப்படுகிறது. ஈசாவாஸ்ய உபநிஷத மந்திரங்கள் எந்த யாக யக்ஞங்களிலும் எந்த கர்மாக்களிலும் பயன்படுத்தும் வழக்கம் இல்லை.*

*இவ்வுபநிஷத் ஆத்மாவின் (நம் சுயவடிவைப்பற்றிய) உண்மைநிலையை உணர்த்துவதே அதற்க்குக் காரணம்.*

*ஆதிஷங்கர பகவத்பாதர் ஈசாவாஸ்ய உபநிஷத்தின் விளக்கவுரையில் துவக்கத்திலேயே ஆத்மாவின் தன்மைகள் என்ன என்பதை பற்றி மிக அற்புதமாக நம் சுயநிலையை எடுத்துக்கூறியுள்ளார்.*

***"ஆத்மா பரிசுத்தமானது, பாவத்தால் தீண்டப்படாதது, ஒன்றாக இருக்கும் தன்மையுடையது, என்றும் உள்ளது, சரீரசம்பந்தம் அற்றது. எங்கும் நீக்கமற நிறைந்திருப்பது".***

*இவ்வாறுள்ள பிரம்மநிலையைப் பற்றியே பின்னர் சொல்லப் போகிறது.*

வேதத்தில் சொன்ன கர்மங்களை மட்டும் ஆசைவயப்பட்டு செய்தால் ஸ்வர்கம் முதலான லோகங்கள் பலனாகக் கிடைக்கின்றன. வேதத்தில் சொன்ன உபாசனைகளை மட்டும் செய்தால் ஸ்வர்கத்தை காட்டிலும் மேலான சில புண்ணிய லோகங்கள் பலனாகக் கிடைக்கின்றன.

கர்மத்தையும், உபாசனைகளையும் சேர்ந்து செய்தால் பிரஹ்மலோகம் பலனாக அடையப்பெறுகிறது. இதில் பிரஹ்மலோகம் அநித்யமாக இருந்தபோதிலும், ஸம்ஸார வாழ்வில் அடையப்படும் உயர்ந்த பலனாக இருக்கிறது.

ஆகவே கர்மத்தையும், உபாஸனையையும் தனித்தனியே செய்வதை உபநிஷத் நிந்தனை செய்து, இரண்டையும் சேர்த்து செய்ய வேண்டும் என்று கூறுகிறது.

கடைசி நான்கு மந்திரங்கள் பிரார்த்தனைகளாக அமைகின்றன. குறிப்பாக சூர்யதேவனை அழைத்து சத்தியத்தை மறைக்கின்ற திரையை நீக்க வேண்டுதல் விடுக்கப்படுகின்றது.

மேலும், மரணகாலத்தில் மனமானது தான் செய்த நல்ல செயல்களை நினைவுகூறவேண்டும் என்றும், மரணத்திற்குப் பிறகு நல்ல பாதையில் அழைத்துச் செல்லவேண்டும் என்றும் வேண்டுதல் விடுக்கப்படுகிறது.

*இவ்விதம் ஆத்மதத்துவ விசாரம் நடைபெற்று, பிறகு கர்ம உபாசனா விஷயத்தில் அடையப்படும் பலனைக் கூறி, பிரார்த்தனையுடன் இந்த ஈசாவாஸ்ய உபநிஷதம் முடிவடைகிறது. இனி ஒவ்வொரு மந்திரமாக அதன் பொருளும், உட்பொருளுமாக காண்போம்.*

*எந்த ஒன்றையும் செய்யும்போது அதற்குரிய மனநிலை இருக்கவேண்டியது இன்றியமையாதது. எந்தக்காரியத்தைச் செய்கின்றோமோ அதற்குரிய மனநிலையை வரவழைத்துக்கொண்டு, அதன்பிறகு அந்தச் செயலில் ஈடுபடுவது சிறப்பான பலனைக்கொடுக்கும்.*

*நமது கோவில்களில் பல சுற்றுப்பிரகாரங்கள் அமைந்திருப்பதின் காரணம் இதுவே. ஒவ்வொரு பிரகாரத்தினை சுற்றி வரும் போதும் மற்ற எண்ணங்களை எல்லாம் ஒவ்வொன்றாக விட்டு விட்டு கடைசியாக கருவறை சென்று இறைவனை தரிசிக்கும் பொழுது, நம்மால் முழுமனதுடன் தெய்வ சிந்தனையில் ஈடுபடமுடிகிறது.*

*அதுபோல இந்த அனுபூதிக் கருவூலமான இந்த நிஷதங்களைப் படிக்கத் துவங்குவதற்கு முன்பு நமது சிந்தனையை அவற்றுடன் இணைக்க இந்த சாந்தி மந்திரங்கள் உதவுகின்றன.*

*மேலும் உபநிஷதங்களின் உண்மைப் பொருளை வெறும் புலமையால் உணரமுடியாது. பணிவுடனும்,*

*வழிபாட்டு உணர்வுடனும் அணுகும்போது மட்டுமே அதனைப் புரிந்து கொள்ளமுடியும். அத்தகைய மனப்பான்மையை மனதில் கொள்வதற்காக இந்த மந்திரங்கள் முதலில் ஓதப்படுகின்றன.*




*சாந்தி மந்திரம்:*

---------------

*ஓம் பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே |*
*பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவசிஷ்யதே ||*
*ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ||*

*மந்திர விளக்கம்*

---------------

*இறைவன் முழுமையானவர், இந்த உலகம் முழுமையானது. முழுமையான இறைவனிலிருந்தே முழுமையான உலகம் தோன்றியுள்ளது.*

*முழுமையிலிருந்து முழுமையை எடுத்தபின்பும் முழுமையே எஞ்சியுள்ளது!*

*ஒரு புதிரின் மூலம் உலகத்தை விளக்க முற்படுகின்ற மந்திரம் இது. இறைவன் முழுமையானவராக, பூரணமானவராக இருக்கிறார். அவரிலிருந்து முழுமையான உலகம் தோன்றியுள்ளது. இருப்பினும் தனது பூரணத்துவம் சிறிதும் குறையாமல் முழுமையாகவே இருக்கிறார். இதனை மூன்று வழிகளில் புரிந்து கொள்ளலாம்.*

1. *ஒரு தீபத்திலிருந்து எண்ணற்ற தீபங்களை ஏற்ற முடியும். இதனால் முதல் தீபத்தின் முழுமை கெடுவதில்லை. அதிலிருந்து ஏற்றப்பட்ட மற்ற தீபங்களும் முழுமையாக, நிறைந்த ஒளி தருவனவாக இருக்கும்.*

2. *நாம் எத்தனையோ நபர்களை, உறவுகளை நேசிக்கிறோம், முழுமையாக அவர்களிடம் அன்பு வைக்கிறோம். இதனால் நம்மிடமுள்ள அன்பு குறைந்து விட்டது என்று கூறமுடியாது. நம்முடைய அன்பை எத்தனை பேருக்கு வேண்டுமானாலும் குறையாமல் கொடுக்க முடியும்.*

3. *ஒரு செடியில் எத்தனையோ பூக்கள் மலர்கின்றன. ஒவ்வொரு பூக்களும் முழுமையாக உள்ளது. முழுமையான பூக்களைத் தருவதால் செடியின் முழுமை*

எந்த விதத்திலும் குறைவதில்லை. ஏனெனில் செடியின் முழுமை வேறு, பூக்களின் முழுமை வேறு.

அதுபோலவே, இறைவனிலிருந்து எத்தனையோ முழுமையான உலகங்களும், அண்ட சராசரங்களும் தோன்றலாம். ஆயினும் இறைவனது முழுமை ஒருபோதும் குறைவதில்லை.

இறைவனின் முழுமை உலகங்களின் தோற்றத்தினாலோ, மறைவினாலோ பாதிக்கப்படாத ஒன்று. இறைவனிலிருந்து தோன்றியதால் உலகமும் இறையம்சம் பொருந்தியது என்பதுதான் இந்த சாந்தி மந்திரத்தின் கருத்து.

இந்த உண்மையை உணர்ந்து வாழ்ந்தால் சாதாரணமான வாழ்க்கையே நம்மை இறை நெறியில் அழைத்து செல்ல வல்லதாகிவிடும்.

வேத மந்திரங்கள் அனைத்தும் இறுதியில் ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: என்று நிறைவுறுவதைக் காணலாம். சாந்தி என்றால் அமைதி. இது நாம் மூன்று விதமான தடைகளிலிருந்து விடுபடுவதற்காக மூன்று முறை சொல்லப்படுகிறது.

1. ஆத்யாத்மிகம் — நம்மால் வரும் தடை, உடல் நோய்,மனப்பிரச்சனை போன்றவைகள்.

2. ஆதி பௌதீகம் — பிற உயிர்களால் வரும் தடை.

3. ஆதி தைவிகம் — இயற்கை சக்திகளால் வரும் தடை. மழை, இடி, தீ போன்றவற்றால் வரும் தடைகள்.

இவ்வாறு சாந்தி மந்திரத்தினை மூன்று முறை சொல்வதன் மூலம் இந்த மூன்று வகையான தடைகளை தகர்த்து விடுபட்டு, இந்த உபநிஷத்தினை படிப்பதற்கான நமது முயற்சி வெற்றி பெறுவேண்டும் என பிரார்த்திக்கிறோம்.

அறுதி உண்மையான பரம்பொருளை அடைய வேண்டுமானால் முதலில் ஒளியை அடைந்தாக வேண்டும்.

அதற்கு நம் அன்றாட வாழ்க்கையை விட்டு ஓடுவதல்ல, வாழவேண்டிய முறையில் வாழ்க்கையை வாழ்வது எப்படி? என்பதனை அறிந்து, அதன்படி வாழ்ந்தால் அதுவே ஓர் ஆன்மீக சாதனையாக மாறிவிடுகின்றது.

உரிய முறையில் வாழ்வதற்கான உயர் நிலையை அடைய முதல் மற்றும் இரண்டாவது படிகளாக முதல் இரண்டு மந்திரங்கள் நம்மை கையை பிடித்து படிகற்களில் ஏற்றுகின்றன.

***ஓம் ஈசாவாஸ்யமிதக்ம் ஸர்வம் யத் கிஞ்ச ஜகத்யாம் ஜகத் |***
***தேன த்யக்தேன புஞ்ஜிதா மா க்ருத: கஸ்யஸ்வித் தனம் ||*** *1*

1. *மாறுகின்ற இயல்புடைய இந்த உலகில் உள்ள அனைத்தும் இறைவனால் நிறைக்கப்பட வேண்டும். அத்தகைய தியாக சிந்தையுடன் உலகை அனுபவி. பணம் யாருடையது? அதற்காக ஆசைப்படாதே.*

*உலகமும், அதன் செல்வங்களும், அது தரும் சுகபோகங்களும் எல்லாம் மாறுபவை. அதாவது நிலையற்றவை.*

*நிலையான இன்பம், அமைதி இதில் எதையும் இந்த உலகிலிருந்து எதிர்பார்க்க முடியாது. ஆனால் நாம் ஒவ்வொருவரும் நிலையான இன்பத்தினையும், அமைதியையும் தேடுகிறோம்.*

*அதனைப் பெற என்ன வழி?*

*உண்மையில் எல்லாவற்றிலும் இறைவனை காண்பதின்மூலம் இதைச் செய்யவேண்டும்.*

*அதாவது, இதன் பொருள் என்ன?*

*நீ உன் மனைவியோடு வாழலாம், அவளை கைவிடவேண்டும் என்ற அவசியம் இல்லை. ஆனால்*

*அவளிடம் கடவுளைக் காணவேண்டும். உங்கள் குழந்தைகளில் இறைவனைக் காணுங்கள். எல்லாவற்றிலும் இப்படியே. வாழ்விலும் சாவிலும், இன்பத்திலும் துன்பத்திலும் எல்லவற்றிலுமே இறைவன் சமமாக நிறைந்திருக்கிறார்.*

*நாம் நமது கற்பனையால், நமது அனுமானத்தினால் உண்மை என நினைத்து உருவாக்கிகொண்டிருக்கும் இந்த உலகத்தை துறந்து விடவேண்டும்.*

*ஏனென்றால் இந்த அனுபவம் முழுமையான அனுபவத்தை, ஆழமற்ற அறிவை, நமது சொந்த பலவீனத்தை அடிப்படையாக கொண்டது. இதைத் துறந்து விடுங்கள்.*

*நாம் உடும்புப்பிடியாக பிடித்துக்கொண்டிருக்கும் இந்த உலகம், நம்முடைய கற்பனையில் தோன்றிய பொய்யான உலகம். அதை விட்டு விடுங்கள். நன்றாக கண்களைத் திறந்து பாருங்கள். இப்படிப்பட்ட ஓர் உலகம் எப்போதுமே இருக்கவில்லை என்பதனை உணருங்கள்.*

*இதை ஒரு உதாரணத்தின் வாயிலாக தெளிவு பெறலாம் எப்படி?*

*நீங்கள் ஒரு திரைப்படத்திற்கு செல்கின்றீர்கள், அங்கு திரையரங்கத்தினுள் அமர்ந்து படம் பார்க்கும் பொழுது, உங்களை மறந்து அங்கு காணுகின்ற*

*காட்சியில் ஒன்றிவிடுகிறீர்கள். அந்த காட்சியில் வருகின்ற மாளிகையினுள் நீங்களே இருப்பது போலவும், அங்கு நடைபெறுகின்ற செயல்களை நீங்கள் கூடவே இருந்து பார்ப்பது போலவும் தோன்றுகின்றன.*



*இந்த ஆழ்ந்த மாயாதோற்றத்தின் இடையில் மின்சாரம் போனதினால் படம் திரையில் தெரியாமல் வெறும் ஒரு வெள்ளை திரை மட்டுமே காட்சிக்கு தெரியும். அப்பொழுதான் நீங்கள் உங்கள் சுய நினைவிற்கு வந்து திரையரங்கில் அந்த திரை மட்டுமே உண்மை, மற்ற காட்சிகளெல்லாம் மாயை (பொய்) என்பது புரியும். இதுதான் உண்மை.*

*அதுபோல இந்த உலகியல் காட்சிகள் உங்கள் பார்வையிலிருந்து மறையும் ஒரு நாள்தான் உங்கள் மரண நாள் அன்று இந்த மாயை விடுபட்டு இறைவன் மட்டுமே உண்மை என தெரியும். ஆனால் வந்த நோக்கம் புரியாமல் போனதால் தொழில் நுட்பக்கோளாறு காரணமாக பாதி படத்தில் திரையரங்கினை விட்டு வெளியேறியது போல, நீங்கள் இந்த உலகினை உண்மையென நினைத்து இதுவரை வாழ்ந்த வாழ்வின் கோளாறு காரணமாக இந்த உலகை விட்டு வெளியேற வேண்டியிருக்கும்.*

*அது ஒரு மாயை, கனவு. இருந்தது இறைவன் மட்டுமே, இருப்பதும் இறைவன் மட்டுமே. குழந்தையில், கணவனில், மனைவியில் எல்லாவற்றிலும் இருப்பவர் அவரே, தீயவரில் இருப்பவரும் அவரே, பாவத்தில் இருப்பவரும் அவரே, பாவியாக இருப்பவரும் அவரே, வாழ்விலும் சாவிலும் அவரே இருக்கிறார். எங்கும் இருப்பவர் அவர். எல்லாம் அவருடையது, வேறு யாருடையதும் அல்ல.*

*எனவே நாம் உண்மையென நினைத்துக்கொண்டிருக்கும் செல்வத்தில் ஆசை கொள்ளாமல் அனைத்தும் இறைவனுக்கு உரித்தானவை என்ற தியாக சிந்தனையுடன் அனுபவிக்குமாறு இந்த மந்திரத்தின் வாயிலாக இந்த உபநிஷதம் கூறுகின்றது. இது நீங்கள் ஏறும் முதற்படி.*

*முதல் மந்திரத்தில் எல்லாம் இறைவனுடையது, எல்லாம் அவன் அம்ஸம் என்ற தியாக சிந்தையுடன் வாழ்வதால் பற்றின்மை உண்டாகின்றது எனக் கண்டோம்.*

***இனி இரண்டாவது மந்திரம்:-***

***குர்வன்னேவேஹ கர்மாணி ஜிஜீவிஷேச்சதக்ம் ஸமா: |***
***ஏவம் த்வயி நான்யதேதோஸ்தி ந கர்ம லிப்யதே நரே || 2***

2. *கடமைகளைச் செய்தபடியே நூறு ஆண்டுகள் வாழ விரும்பவேண்டும். உலகை அனுபவித்து வாழ விரும்புகின்ற உன்னைப் போன்றவர்களுக்கு செயலில் ஈடுபடுவதைத் தவிர வேறு வழி கிடையாது. இவ்விதம் வாழ்வதால் செயலானது உனக்கு பந்தத்தை உண்டுபண்ணாது.*

*உலகில் வாழவேண்டும். அதற்கு செயல் செய்தாக வேண்டும். கடமைகளைச் செய்யாமல் யாரும் வாழ முடியாது. எந்த வேலையைச் செய்தாலும் அதற்கு விளைவு ஒன்று இருக்கும்.*

*அது நல்லதாகவும் இருக்கலாம், கெட்டதாகவும் இருக்கலாம், இரண்டும் கலந்ததுவாகவும் இருக்கலாம். ஆனால் விளைவு ஒன்று இருந்தே தீரும். விளைவு எதுவானாலும் அது நம்மை பிணைக்கிறது. மனதில் ஒரு பதிவை உண்டாக்குகிறது.*

*அந்தப்பதிவானது அந்தச் செயலை செய்யுமாறு தூண்டுகின்றது.*

*மீண்டும் அது சம்பந்தமான வேலைகளைச் செய்கிறோம். இவ்வாறு வேலைகள் தொடர்கின்றன. இது தொடர் பிறவிக்கு வழியாகிறது.*

*ஆனால், உலகை இறைவனுக்கு உரியதாகக் கண்டு, அவரது சொத்திற்கும், சுகத்திற்கும் ஒரு பொறுப்பாளனைப் போன்று வாழ்ந்தால், அந்த சிந்தையுடன் செயல் படுகின்ற செயலினால் வருகின்ற பலன் நம்மை பிணைக்காது. இதனால் பலன் நம்மை பிணைக்காததால் அத்தகைய வேலை அக வளர்ச்சிக்கான ஓர் ஆன்மீக சாதனையாக மாறிவிடுகிறது.*

*உலகினை இறைவனுக்கு உரியதாகக் கண்டு, அதற்கேற்ப கடமைகளைச் செய்து வரும்பொழுது அதுவே ஆன்மீக சாதனையாக ஆகின்றது.*

*உலகில் இறைவனை காண்பது எப்படி?*

*அதற்கு முதலில் நம்மில் இறைவனை காண்பதுதான்.*

*நாம் யார்?*

*உடல், மனம், பிராணன், புத்தி, ஆன்மா என்ற ஐந்தின் தொகுதியே நாம். மனம், பிராணன், மற்றும் புத்தியின் தொகுதியே ஜீவன் அல்லது உயிர் எனப்படுகின்றது.*

*எங்கும் நிறைந்தவரான இறைவன் நம்மில் ஆன்மாவாக உள்ளார். நம்மில் உள்ள அந்த இறையம்சமே ஆன்மா. அதுவே நமது உண்மை இயல்பு. அந்த ஆன்மாவை அறிய வேண்டும். இறையம்சமான ஆன்மாவை நாம் அறிவதுதான் உலகில் இறைவனை காண்பதற்கான வழி.*

***அஸுர்யா நாம தே லோகா அந்தேன தமஸாவ்ருதா: |***
***தாக்ம் ஸ்தே ப்ரேத்யாபிகச்சந்தி யே கே சாத்மஹனோ ஜனா:***
*|| 3*

3. *தங்களை அறியாமல் அழித்துக்கொள்கின்ற மனிதர்கள் எவரோ அவர்கள் காரிருளினால் மூடப்பட்டுள்ள உலகங்களை அடைகிறார்கள்.*

*ஆசை வசப்பட்டு, உடம்புடனும், மனத்துடனும் தம்மை பிணைத்துக்கொண்டு, உலகின் சுகபோகங்களை நாடி வெளி விசயங்களில் கவனம் செலுத்துகின்றார்கள். இவர்கள் மேன்மேலும் பிறவிக்கு உள்ளாகின்றார்கள்.*

*மாறாக ஆன்மாவுடன் தம்மை ஒன்று படுத்திக் கொண்டு தன்னுள்ளே நாட்டம் செலுத்தினால்*

*இறைநிலையை அடைந்து மரணத்தை வெல்லமுடியும்.*

*அதாவது பிறவியற்றவர்களாகிறோம்.*

*இதை தவிர்த்து ஆன்மாவை நினைக்காமல் உடலே உண்மை என்று வாழ்பவர்களை இந்த மந்திரம்* ***'ஆன்மாவை அழிப்பவர்கள்'*** *என்று குறிப்பிடுகின்றது.*

*அதாவது ஆன்மாவை அழிக்க முடியாது, அதற்கு நிகரான குற்றத்தைச் செய்பவர்கள் என்று பொருள். அத்தகையவர்கள் மரணத்திற்கு பிறகு இருண்ட உலகங்களை அடைகிறார்கள்.*

*அதாவது தொடர் பிறவிக்கு உள்ளாகி, துன்பத்தில் விழுகிறார்கள். இந்தத் துன்பத்திலிருந்து விடுபடவேண்டும் என்றால் அக வளர்ச்சியில் ஈடுபடவேண்டும். ஆன்மாவை தேட வேண்டும்.*

*அந்த ஆன்மாவை அறிந்து அதனுடன் ஒன்று படுத்திக்கொண்டு வாழும்போது இறை நிலை அடைகிறோம்.*

*அந்த ஆன்மாவின் இயல்பு என்ன?*

*அனேஜ தேகம் மனஸோ ஜவீயோ*
*நைனத்தேவா ஆப்னுவன் பூர்வமர்ஷத் |*
*தத்தாவதோஸ்ன்யானத்யேதி திஷ்ட்டத்*
*தஸ்மின்னபோ மாதரிச்வா த்தாதி || 4*

௪. *இந்த ஆன்மா அசைவற்றது. ஒன்றேயானது, அதாவது அனைவருக்குள்ளும் ஒன்றேயாக இருக்கிறது.*

*மனதைக்காட்டிலும் வேகமாகச் செல்லக்கூடியது. அதனை இந்திரியங்கள் அடைய இயலாது. ஏனெனில் மனம் இதனை அடைவதற்கு முன்பே இது சென்றுவிடுகிறது. ஓடுகின்ற தனக்கு வேறாக உள்ள இந்திரியங்களை இது முந்துகிறது. அதே சமயம் அது அசைவற்று இருப்பதால் பிராணன் அனைத்தையும் இயக்குகிறது. அதன் இருப்பில் ஹிரண்யகர்பர் பலன்களை வகுத்துக் கொடுக்கிறார்.*

*ஒரு பொருள் அசையவோ இயங்கவோ வேண்டுமானால் அந்த இயக்கத்திற்கு ஓர் இடம் வேண்டும். எங்கும் நிறைந்த ஒன்று எங்கே அசையும்? எனவேதான் ஆன்மா அசைவற்றது.*

*மனம் புறப்பொருட்களை நினைக்கும் பொழுது, அது வெளியில் சென்று அந்தப் பொருளின் வடிவை எடுப்பதாக நமது தத்துவ நூல்கள் கூறுகின்றன.*

*இதுவரை விஞ்ஞானம் கண்டறிந்துள்ள ஒலியின் வேகத்தை விட, ஒளியின் வேகத்தை விட மிக மிக*

*வேகமாக மனம் சென்று அந்தப் பொருளின் வடிவை எடுக்கிறது.*

*அவ்வளவு வேகமாக மனம் சென்றாலும், மனம் செல்வதற்கு முன்பே அங்கே 'ஆன்மா' என்ற இறைவன் உள்ளார். எனவேதான் மனத்தை விட விரைவானது, நிலையாக நின்றபடியே அனைத்திற்கும் முன்னால் செல்கிறது, ஓடுகின்ற அனைத்தையும் முந்துகிறது என்றெல்லாம் கூறப்பட்டது.*

*புலன்களால் ஆன்மாவை அறிய இயலாது. ஒவ்வொரு கருவியும் ஒரு குறிப்பிட்ட பணியைச் செய்ய வல்லது. தொலை நோக்கிக் கருவியால் தூரத்திலுள்ள பொருளை மட்டுமே பார்க்க முடியும், அருகிலுள்ள பொருளை பார்க்க இயலாது. அதுபோல, நுண்ணோக்கியால் மிகச் சிறிய பொருளை மட்டுமே பார்க்க இயலும்.*

*இந்த இந்திரியங்கள் (புலன்கள்) புற உலகை அனுபவிப்பதற்காகப் படைக்கப்பட்டவை. அக உலக உண்மைகளையோ, ஆன்மாவையோ பார்க்க அதனால் இயலாது.*

*இதையே பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் கீதையில்,*

***'உனது இந்தக் கண்ணினால் என்னைப் பார்க்க இயலாது. எனவே உனக்கு தெய்வீகக் கண்ணை தருகிறேன்'***

*என்று அர்ஜுனனிடம் கூறுகிறார்.*

*உண்மை என்னவெனில், எந்த ஓர் இயக்கமும் நடைபெற வேண்டுமென்றால் இயங்காத ஒன்று அதற்கு ஆதாரமாக வேண்டும். உதாரணமாக, ஒரு ரயில் வண்டி ஓடவேண்டுமானால் அதற்கு அசையாத தண்டவாளம் ஆதாரமாக வேண்டும். திரைப்படம் இயங்க வேண்டுமானால், அதற்கு அசையாத ஒரு திரை ஆதாரமாக வேண்டும்.*

*அவ்வாறே, இந்த உலகின் இயக்கங்கள் அனைத்திற்கும் பிராணன் (காற்று) தேவைப்படுகின்றது. இந்த அசைகின்ற பிராணன் இயங்குவதற்கு அசைவற்ற* ***'ஆன்மா'*** *ஆதாரமாக உள்ளது.*

***ததேஜதி தன்னைஜதி தத்தூரே தத்வந்திகே |***
***ததந்தரஸ்ய ஸர்வஸ்ய தது ஸர்வஸ்யாஸ்ய பாஹ்யத: || 5***

5. *அது அசைகிறது, அது அசைவதில்லை. அது தூரத்தில் உள்ளது, மிக அருகில் உள்ளது. அது அனைத்தின் உள்ளே உள்ளது, அனைத்தின் வெளியிலும் உள்ளது.*

*ஆன்மா, கடவுள் போன்ற உண்மைகள் ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டவை.*

*இவற்றை அறிவினால் புரிந்து கொள்ள முடியாது என்றே வேதங்கள், உபநிஷத்துகள் முதலான அனைத்து சாஸ்திரங்களும் கூறுகின்றன.*

*அவ்வாறு புலன்களுக்கு எட்டாத ஒன்றைப் புலன்களால் விளக்க முற்படுகின்ற மந்திரம் இது.*

*ஆன்மா எங்கும் நிறைந்ததாக இருப்பதால் இந்த முரண்பட்ட கருத்துக்கள் அனைத்தும் சாத்தியமாகின்றன.*

*பிரபஞ்சத்தின் இயக்கங்கள் அனைத்திற்கும் ஆதாரமாக இருப்பது ஆன்மா. எனவே ஆன்மா அசைகிறது.*

*ஆன்மா என்ற நிலையில் அதாவது எங்கும் நிறைந்த நிலையில் அதற்கு அசைவில்லை.*

*நம் ஒவ்வொருவரின் உள்ளேயும் ஆன்மா உள்ளது. எனவே அது மிக மிக அருகில் உள்ளது. ஆனால், நாம் அதை உணராத நிலையில் அது மிகவும் தூரத்தில் உள்ளது.*

*அது போலவே இறைவன் என்ற நிலையில் அது எங்கும் நிறைந்ததாக இருப்பதால் அனைத்தின் உள்ளேயும் உள்ளது, வெளியேயும் உள்ளது.*



*ஆன்மாவாக தன்னை உணர்ந்தவன், அதாவது ஆன்ம அனுபூதி பெற்றவன் பெறும் பலன் என்ன?*

***யஸ்து ஸர்வாணி பூதான்யாத்மன்யேவானுபச்யதி |***
***ஸர்வபூதேஷு சாத்மானம் ததோ ந விஜுகுப்ஸதே || 6***

6. *யார் எல்லா உயிரினங்களையும் தன்னிடத்திலேயே பார்கின்றார்களோ, எல்லா உயிரினங்களிலும் தன்னைப் பார்க்கின்றாரோ இந்த அறிவை பெற்ற அவர் யாரையும் வெறுப்பதில்லை.*

***யஸ்மின் ஸர்வாணி பூதான்யாத்மைவாபூத் விஜானத: |***
***தத்ர கோ மோஹ: க: சோக ஏகத்வமனுபச்யத: || 7***

7. எல்லாம் ஒன்றே (எல்லாம் ஆன்மாவே) என்று பார்கின்றவனாகவும், உண்மையை அறிபவனாகவும் இருக்கின்றவனுக்கு மோகம் (ஆசை) ஏது? சோகம் ஏது?

பிடிக்காத ஒன்றை வெறுக்கிறோம். ஒன்றை மற்றொன்றாகக் காண்பதால் மனமயக்கம் உண்டாகின்றது. விரும்பிய ஒன்று கிடைக்காத போது கவலை ஏற்படுகின்றது. ஆன்ம அனுபூதி பெற்றவர்களுக்கு இந்த மூன்றும் இல்லை என்று 6-7 மந்திரங்கள் கூறுகின்றன.

ஆன்ம அனுபூதி, இறைக் காட்சி என்றெல்லாம் கூறப்படுவது ஓர் உள் அனுபவம், உணர்வில் ஒரு மாற்றம் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

குழந்தையும், வயசுப் பசங்களும், வயதானவர்களும் ஒரே உலகில்தான் வாழ்கின்றார்கள். ஆனால் அவர்கள் காண்கின்ற உலகம் ஒன்றல்ல!

இதில் அவர்களின் காட்சி வெவ்வேறு விதமாக அமைவதற்கு வெளி உலகம் காரணம் அல்ல. அவர்களது மன உணர்வின் விரிவே ஆகும். அவர்களது உள்ளத்தின் உணர்வே காரணம்.

ஆரம்பத்தில் குழந்தையாக இருக்கும் பொழுது வீட்டினரை மட்டுமே நேசிக்கும் நாம் நமது உணர்வு விரிய விரிய படிப்படியாக சுற்றத்தினரை,

*நண்பர்களை, பிறரை, நாட்டை, உலகை நேசிக்கிறோம்.*

*இதில் சுற்றியிருப்பவர்களிடம் எந்த மாற்றமும் ஏற்படவில்லை. உண்மையில் மாற்றம் நம்மிடையே மட்டுமே நிகழ்ந்துள்ளது. இதற்கு காரணம் நமது உணர்வு விரிந்ததுதான்.*

*இதுபோல, ஆன்ம அனுபூதி பெற்றவர்களின் உள் உணர்வு விரிந்து அதன் எல்லைகளை தொட்டு விடுகின்றது. அவர்கள் வாழ்வில் இனி எந்த மாற்றமும் ஏற்பட முடியாத அறுதி நிலை அது. இனி உணர்வுகள் விரிய முடியாத அளவுக்கு விரிந்து விட்ட நிலை அது. இந்த பிரபஞ்சமே அவர்களுடையதாகி விடுகின்றது.*

*அவர்கள் எங்கும், தன்னையே தனது உணர்வையே காண்கின்றார்கள். அவர்களிடம் பற்று இல்லாததால் உலகின் இன்ப துன்பங்கள் எதுவும் அவர்களை பாதிப்பதில்லை.*

***"எனது ராஜ்ஜியத்திற்கு மட்டுமே நான் ராஜாவாக இருந்தேன். ஆனால், இந்த ஆத்ம அனுபூதியை அடைந்து நான் இந்த உலகத்திற்கே ராஜாவானேன்".***

*உண்மையில் எனது என்று எதுவுமே இல்லை, இழப்பதற்கு என்று ஒன்றுமே இல்லை. என்று*

*மிதிலை மன்னர் ஜனகர் கூறுவதாக மகாபாரதம் தெரிவிக்கின்றது.*

*ஆன்ம அனுபூதி பெற்றவர்கள் இவ்வாறு சுகம் — துக்கம், வெற்றி — தோல்வி, நன்மை — தீமை போன்ற இருமைகளைக் கடந்து விடுகிறார்கள். வெறுப்போ, மனமயக்கமோ, கவலையோ இல்லாதவர்களாக ஆகிவிடுகிறார்கள்.*

*ஆன்ம அனுபூதி பெற்றவர்களின் அனுபவத்தை இந்த மந்திரம் கூறுகிறது.*

***ஸ பர்யகாச்சுக்ரமகாயமவ்ரணம்***
***அஸ்னாவிரக்ம் சுத்தமபாபவித்தம் |***
***கவிர்மனீஷீ பரிபூ: ஸ்வயம்பூர் யாதாத்த்யதோ***
***|ர்த்தான் வ்யத்தாச் சாச்வதீப்ய: ஸமாப்ய || 8***

8. *ஆத்ம அனுபூதி பெற்றவன் அனைத்தின் உட்பொருளையும் காண்கிறான். அவன் சுத்தமானவன், மனத்தை வசப்படுத்தியவன். சரீரம் அற்றவன், பாபம் அற்றவன், அனைத்து அறிவையும் உள்ளடக்கியவன், யாரையும் சாராதவன், எல்லாமாக இருப்பவன். அனைத்துப் பொருட்களின் உண்மை இயல்பை அவன் என்றைக்குமாக அறிந்திருக்கிறான். அவன் ஒளிமையமான உடம்பற்ற, முழுமையான, தசைகள் இல்லாத, தூய பாவமற்ற இறைவனை அடைகிறான்.*

*அவரவர்கள் செய்த கர்ம, உபாஸனைகளுக்குத் தக்கபடி ஆற்ற வேண்டிய கடமைகளை வகுத்துக்கொடுக்கும் சக்தியை அதிக காலம் இருக்கின்ற பிரஜாபதிக்கு ஈஸ்வரன் கொடுத்தார்.*

*அதாவது ஆத்மாவைப் பற்றிய தன்மைகள் கூறப்பட்டு, இந்த ஆத்ம தத்துவமே ஈஸ்வரனாகவும் இருக்கும் தன்மை கூறப்படுகிறது.*

*கவி: என்றால் க்ராந்த தர்சி, அப்பால் காண்பவன் என்று பொருள். காணும் தோற்றத்துடன் மற்றவர்கள் நின்று விடுகிறார்கள். ஆனால், ஆன்ம அனுபூதி பெற்றவன், ஒவ்வொரு தோற்றத்திற்கும் பின்னால் ததும்பிகின்ற இறையுணர்வைக் காண்கிறான்.*

*மனிஷி என்றால் மனைத்தை வசப்படுத்துவதற்கான புத்தியை பெற்றவன். மனத்தை மனத்தால் வசப்படுத்த முடியது, அதைவிட ஆற்றல் மிக்க ஒன்று வேண்டும். அதுவே புத்தி, உள்ளுணர்வு (Intuition) என்றும் இது அழைக்கப்படுகிறது.*

*இது எல்லாரிடத்திலும் செயல்படத் தொடங்கவில்லை. பிரார்த்தனை, காயத்ரீ மந்திர ஜபம் போன்றவற்றால் இது விழித்தெழுந்து செயல்படத் துவங்குகிறது.*

*பரிபூ: என்றால் அனைத்து அறிவையும் உள்ளடக்கியவன். உலகில் எத்தனையோ வகை அறிவுகள் உள்ளன. 'கற்றது கை மண் அளவு கல்லாதது உலகளவு' என்பார்கள். நாம் எவ்வளவு அறிந்தாலும் இன்னும் அறிய வேண்டியது எவ்வளவோ இருக்கும், ஆனால் ஆன்மவை அறிந்தவன் தன்னில் திருப்தியுற்று நின்று விடுகின்றான்.*

*அதனால் ஆன்ம அனுபூதி மற்ற அறிவுகளின் நிறைவாக, அனைத்தையும் உள்ளடக்கியதாக, மற்ற அறிவுகளையும் விட உயர்ந்ததாக கூறப்படுகிறது.*

*ஆன்ம அனுபூதி பெற்றவன் தன்னிலும் உலகிலும் இறையுணர்வை உணர்ந்து விட்டதால் அவன் அதைச் சார்ந்து இருகின்றானே தவிர பொருட்களையும் மனிதர்களையும் அவன் சார்ந்து இருப்பதில்லை. அதனால் அவன் எதையும் சாராதவன் எனப்படுகின்றான்.*

*அனைத்திற்கும் மேலாக, அவன் பொருட்களின் உண்மை இயல்பை அறிந்திருகின்றான். எது இறை நெறிக்கு துணை புரியும், எது இறை நெறிக்கு தடையாக இருக்கும் என்பதனை அவன் நன்கு உணர்ந்திருக்கிறான்.*

*இறை நெறியில் செல்பவனுக்கு இந்த மனத்தெளிவு மிகவும் அவசியமானது. இதனால் வேண்டாதவற்றை விலக்கி அவனால் விரைந்து முன்னேற முடிகிறது.*

*இவ்வாறு ஆன்ம அனுபூதி பெற்றவன் இறைவனை அடைகிறான்.*

*அந்த இறைவனை பற்றி இந்த மந்திரம் மூன்று விஷயங்களை கூறுகிறது.*

1. *இறைவன் ஒளியானவர். அவர் ஒளியாளே அனைத்தும் ஒளிபெறுகின்றன.*

2. *இவர்தான் இறைவன் என்று இறைவனை அடையாளம் காட்ட முடியாது. அவர் உடம்பற்றவர், முழுமையானவர், தசைகள் இல்லாதவர் என்றெல்லாம் கூறுவது இதைத்தெரிவிக்கிறது.*

3. *இறைவன் தூயவர், எந்த பாவமும் அவரை அணுக முடியாது. 'இந்த உலகனைத்தினையும் ஒளியால் விளங்கச் செய்வதன் மூலம் உலகின் கண்ணாக இருப்பவர் சூரியன், ஆனால் யாருடைய பார்வைக் கோளாறோ, பொருட்களின் குறைகளோ அவனை பாதிப்பதில்லை. அதுபோல எல்லோரிடத்திலும் விளங்குகின்ற ஆன்மா சுக துக்கங்களால் பாதிக்கப்படுவதில்லை' என்கின்றது கட உபநிஷதம்.*

*ஆன்ம அனுபூதி பெற்றவன் இவ்வாறு ஒளிமையமான இறைவனை அடைகிறான்.*

*எங்கும் இறைவன் இருப்பதாகக் கண்டு கடமைகளைச் செய்பவன் பற்றின்றி வேலை செய்கிறான். அதனால் ஒளிமயமான இறைவனை அடைகிறான்.*

*எங்கும் இறைவன் இருப்பதை உணர்வது எப்படி?*

*அதற்கான இரண்டு முக்கிய சாதனைகளை இனி வரும் மந்திரங்கள் தெரிவிக்கின்றன.*

*செயல்களின்றி வாழ்க்கை இல்லை. நாம் எப்போதும் ஏதாவது செயல்களில் அன்றாடக் கடமைகள், ஜபதவங்கள், சேவை போன்ற எவ்வளவோ செயல்களுடன் நமது வாழ்க்கை பிணைந்துள்ளது.*

*இந்தச் செயல்களில் நாம் ஏன் ஈடுபடுகின்றோம்?*

*சுய சிந்தனை இன்றி செக்குமாடுகளை போல எல்லோரும் செய்வதால் நானும் செய்கிறேன் என்று வாழ்பவர்கள் இறையுணர்வைப் பெற முடியாது.*

*அதே வேளையில் இறையுணர்வைப் பெற வேண்டும் என்பதற்காக தகுதி வரும் முன்னரே செயல்களை விட்டு விட்டு தியானத்தில் ஈடுபடுவது ஒரு தவறான, போலித்தனமான முயற்சியாக இருக்கும்.*

*எனவே இரண்டும் வாழ்க்கையில் இணைந்து செல்ல வேண்டும். அந்த இணைப்பு பற்றி இனி வரும் மந்திரங்கள் கூறுகின்றன.*

***அந்தம் தம: ப்ரவிசந்தி யேSவித்யாமுபாஸதே |***
***ததோ பூய இவ தே தமோ ய உ வித்யாயாக்ம் ரதா: || 9***

9. *யார் உயர் நோக்கமின்றி கர்மத்தில் (செயல்களில் மட்டும்) மட்டுமே ஈடுபடுகிறார்களோ அவர்கள் அடர்ந்த இருளை அடைகிறார்கள்.*

*யார் தகுதி பெறும் முன்னர் தியானத்தில் (உபாஸனையில்) ஈடுபடுகிறார்களோ அவர்கள் அதை விடக் கொடிய இருளை அடைந்து துன்புறுகிறார்கள்.*

*உடலாலும் வாக்காலும் செய்யப்படும் செயல் கர்மம் என்றும், மனதால் செய்யப்படும் தியானம் உபாஸனை என்றும் அழைக்கப்படுகிறது.*

*வேதத்தில் கூறிய கர்மத்தை ஆசைவயப்பட்டு செய்வதால் அதன் பலனாக போகத்தை அனுபவிக்கிறான். போகத்திற்கு செல்பவன் மோக்ஷத்திலிருந்து விலகிச் செல்வதால் அடந்த இருளை அடைவதாகக் கூறப்படுகிறது.*

*உபாஸனைக்கு பலன் அதிகம். ஆகவே உபாஸனையை மட்டும் செய்பவன் அதிக போகத்தை அடைவதால் மோஷத்திலிருந்து அதிகம் விலகுகிறான். அதனால் அவன் அதிகமான இருளை அடைவதாகக் கூறப்படுகிறது.*

***அன்ய தேவாஹுர் வித்யயா அன்யதாஹுரவித்யயா |***
***இதி சுச்ரும தீராணாம் யே நஸ்தத் விசசக்ஷிரே || 10***

*10. உபாஸனையால் ஒரு பலனும், கர்மத்தினால் வேறு பலனும் உண்டாகின்றது என்று கூறுகிறார்கள். இவ்விதம் எங்களுக்கு எந்த ரிஷிகள் சொன்னார்களோ அதனை நாங்கள் கேட்டிருக்கிறோம்.*

*கர்மத்திற்கு குறைவான பலனும், உபாஸனைக்கு அதிக பலனும் உண்டு என்பது இங்கு கூறப்படும் மையக் கருத்து ஆகும்.*

***வித்யாம் சாவித்யாம் ச யஸ்தத் வேதோபயக்ம் ஸஹ |***
***அவித்யயா ம்ருத்யும் தீர்த்வா வித்யயாSம்ருதமச்னுதே || 11***

*11. தியானம், செயல்கள் இரண்டையும் சேர்த்து யார் அறிகிறானோ அவன் செயல்களால் மரணத்தைக் கடந்து தியானத்தால் இறவாநிலையை அடைகிறான்.*

*இறைவனை நாடுகின்ற ஒரு செயல் மட்டுமே வித்யை என்று நமது சாஸ்திரங்கள் கூறுகின்றன.*

*மற்ற அனைத்தும், அது விஞ்ஞானம், கலை என்று எதுவானாலும், ஏன், வேதங்களை படித்தல் போன்றவைகள் கூட அவித்யை என்றே கொள்ளப்படுகிறது.*

*ஜபம், தவம், போன்ற சாதனைகள் கூட இறைவனை நாடி செய்யாவிட்டால் அது அவித்யை என்றே சொல்லப்படுகிறது.*

*இந்தச் சாதனைகள் வெறும் கிரியை என்ற அளவில் நின்று விடாமல் உயர் நோக்கத்துடன், அதாவது, வித்யையுடன் இணைந்து செய்யப்படவேண்டும் என்பதை இந்த மந்திரங்கள் வலியுறுத்துகின்றன.*

*தவம், தானம் போன்றவற்றை மூன்றுவிதமாகச் செய்யலாம் என்று கீதை கூறுவதை இங்கே கருத்தில் கொள்ளவேண்டும்.*

*தானத்தை எடுத்துக் கொள்வோம். அதனை இறை வழிபாடாகச் செய்யும் பொழுது அக நாட்டத்தையும், மனத்தூய்மையையும் கொண்டுவருகின்றது.*

*தானத்தைப் பெயர் புகழுக்காகச் செய்யவேண்டும் என்று செய்பவர்களுக்கு எதிர்பார்த்த பெயர், புகழ் கிடைக்கவில்லையென்றால் அது துன்பம் தருகின்றது.*

*அதுவே பெயரையும், புகழையும் கொடுத்து விட்டால் அதை தக்கவைத்துக் கொள்வதற்காக மேலும் முயற்சிகளில் ஈடுபட நேர்கிறது. அதன் விளைவாக வருவது மிகப்பெரும் துன்பம்.*

*எப்படியெனில், மற்றவர்களிடத்தில் போட்டி மனப்பான்மை கொண்டு பிறருக்கு துன்பம் விளைவித்து பெயருக்காக தானம் செய்வது பெருந்துன்பமாக மாறுகின்றது.*

*இவ்வாறு தவம், தானம் போன்றவற்றை உயர் நோக்கமின்றிச் செய்யும் போது அவை அவித்யை ஆகின்றன.*

*இவ்வாறு அவித்யை வசப்பட்டுச் செய்பவன் காரிருளில் மூழ்குகிறான். அதாவது அறியாமையினால் மீண்டும், மீண்டும் பிறவிக்கு உள்ளாகிறான்.*

*அதுபோலவே, தவம், தானம், ஜபம், சேவை போன்ற சாதனைகளை எதுவும் செய்யாமல் வெறுமனே தியானம் செய்ய முயற்சிப்பவன் வெற்றி பெறுவதில்லை.*

*ஏனெனில் தவம், ஜபம், சேவை போன்ற கிரியைகள் மனத்தைத் தூய்மைப் படுத்துகின்றன. ஆற்றலைத் தருகின்றன.*

*தூய்மையான ஆற்றல் பெற்ற மனத்தினால்தான் தியானம் செய்ய இயலும்.*

*தவமும், வித்யையுமே ஒரு சாதகனுக்கு முக்கியமான சாதனைகள் ஆகும். தவத்தால் மனத்தின் மாசுகள் அகலுகின்றன. வித்யையால் மோட்சம் பெறுகிறான்.*

***"மரணத்தை கடப்பது என்றால் மரணத்திற்கு காரணமாக வினைப் பயனிலிருந்து விடுதலை பெறுவது".***

*எனவே ஜபம், தவம் போன்ற கிரியைகள் இறைவனை நாடிச் செய்வதால் மனத்தூய்மை பெற்று தியானத்தால் இறை நிலையை அடைகிறான் என்பது இந்த மந்திரங்களின் கருத்து ஆகும்.*

*இறைவனை உருவம் உள்ளவராகவும், உருவம் அற்றவராகவும் வழிபடலாம். இரண்டையும் இணைத்துச் செய்தால்தான் மிக உயர்ந்த பலன் கிடைக்கிறது என்ற உண்மையை இனி வரும் மந்திரங்கள் விளக்க உள்ளன.*

***அந்தம் தம: ப்ரவிசந்தி யேஃஸமபூதிமுபாஸதே |***
***ததோ பூய இவ தே தமோ ய உ ஸம்பூத்யாக்ம் ரதா: || 12***

*12. யார் அருவக்கடவுளை வழிபடுகிறார்களோ (பிரக்ருதி உபாஸனை மட்டும்) அவர்கள் காரிருளில் முழ்குகின்றனர். யார் உருவக்*

*கடவுளில் ( ஹிரண்யகர்பன் உபாஸனை மட்டும்) ஈடுபடுகிறார்களோ அவர்கள் அதைவிடக் கடுமையான இருளில் துன்புறுகிறார்கள்.*

***அன்யதேவாஹு: ஸமபவாதன்யதாஹுரஸம்பவாத் |***
***இதி சுச்ரும தீராணாம் யே நஸ்தத் விசசக்ஷிரே || 13***

13. *"உருவ வழிபாட்டால் கிடைப்பது ஒரு பலன். அருவ வழிபாட்டால் கிடைப்பது வேறு பலன் என்கிறார்கள்". இவ்விதம் எங்களுக்கு யார் அதை சொன்னார்களோ அதை விளக்கிய மகான்கள் இவ்வாறு கூறினார்கள்.*

***ஸம்பூதிம் ச வினாசம் ச யஸ்தத் வேதோபயக்ம் ஸஹ |***
***வினாசேன ம்ருத்யும் தீர்த்வா ஸம்பூத்யா஽ம்ருதமச்னுதே || 14***

14. *அருவ வழிபாடு, உருவ வழிபாடு இரண்டையும் யார் சேர்த்து அறிகிறானோ அவன் உருவ வழிபாட்டால் மரணத்தை கடந்து, அருவ வழிபாட்டால் இறவா நிலையை அடைகிறான்.*

*9–11 ஆகிய மந்திரங்கள் செயல்கள் மற்றும் தியானத்தின் இணைப்பை வலியுறுத்தியது போல இந்த மந்திரங்கள் (12 — 14) இரண்டுவித வழிபாடுகளின் இணைப்பைக் கூறுகின்றன.*

‘**ஸம்பூதி**’ என்றால் தோற்றத்திற்கு வந்த நிலை, இறைவன் பல்வேறு வடிவங்களில் தோன்றுகின்ற உருவ நிலை.

‘**அஸம்பூதி**’ என்றால் தோற்றத்திற்கு வராத நிலை, எந்த உருவமோ குணமோ அற்ற அறுதி நிலை. இந்த இரண்டு நிலைகளிலும் இறைவனை வழிபடலாம்.

ஒன்று உருவ வழிபாடு உருவம், குணம் போன்ற பல்வேறு தன்மைகள் உடைய ஒரு நபராக அவரைக் காண்பது இது. நமது மனத்தால் அறியத்தக்கவராக, வெளிப்பட்ட நிலையில் இறைவனை நாம் இங்கே வழிபடுகிறோம். சிவன், விஷ்ணு, தேவி என்று உருவ நிலையில் இறைவனை வழிபடுவது உருவ வழிபாடு ஆகும்.

இரண்டாவதாக, அருவ வழிபாடு. உருவம், குணம் போன்ற அனைத்துப் பண்புகளையும் கடந்த அறுதி நிலையில் இறைவனை அணுகுவது இது. உருவமோ, குணமோ இல்லாத ஒன்றை மனித மனத்தால் நினைப்பது சாத்தியமல்ல. எனவே இந்த வழிபாடு மிகவும் உயர்ந்த நிலையில் இருப்பவர்களுக்கு உரியது என்பதை சொல்லமலேயே புரியும்.

தகுதியின்றி அந்த வழிபாட்டில் ஈடுபடுகின்றவர்கள் தங்களை தாங்களே ஏமாற்றிக் கொள்கிறார்கள். அதனால்தான் அவர்கள் காரிருளில் மூழ்குவதாக சொல்லப்படுகிறது.

*உருவ வழிபாட்டில் ஈடுபடுவர்கள் சிவன், விஷ்ணு, தேவி என்று பல்வேறு வடிவங்களும் ஒரே பரம்பொருளின் பல்வேறு தோற்றங்களே என்ற உண்மையை உணர்ந்திருக்க வேண்டும். மாறாக, இது என் தெய்வம், சிவன்தான் பெரிது. இவர் உயர்ந்தவர். உன் தெய்வம் நாராயணன் தாழ்ந்தவர், அம்பாள் சிவனுக்கு கீழே என்ற கொள்கை வெறி பிடித்து சண்டையிட்டுக் கொண்டு, மற்ற உருவத்தில் வழிபடுபவர்களின் மீது காழ்புணர்ச்சியைக் காட்டிக்கொண்டு இருப்பவர்கள் தங்களது அறியாமை காரணமாக செய்கின்ற இத்தகைய வழிபாட்டினால் எந்தப் பலனும் பெறுவதில்லை.*

*இறைவனை வழிபட்டும் பலனின்றிப் போவதால்தான் இத்தகைவர்கள் இன்னும் கொடிய இருளில் உழல்கிறார்கள் என்று கூறப்பட்டது.*

*எனவே மன இயல்புக்கு ஏற்ற தெய்வத்தினை வழிபட்டாலும், எத்தனை மதங்களில் எத்தனை தெய்வங்களை வழிபட்டாலும் அவர்கள் அத்தனை பேரும் ஒரே பரம்பொருளைத்தான் பல்வேறு தோற்றங்களில் வழிபடுகிறார்கள் என்ற உணர்வு எப்போதும் இருக்க வேண்டும்.*

*அதுமட்டுமின்றி, உருவ நிலையில் மட்டுமல்ல, இறைவனை அருவ நிலையிலும் வழிபடலாம் என்பதனை ஏற்றுக்கொள்ள வேண்டும்.*

*இத்தகைய மன நிலையில் தெய்வத்தை வழிபடும் பொழுது நாம் ஆன்மீகத்தில் முன்னேறுகிறோம், இறையனுபூதி பெறுகிறோம். மரணத்திற்கு காரணமான வினைப்பயனிலிருந்து விடுபடுகிறோம்.*

*ஒளிமயமான இறைவனை அடைவது பற்றி 8 – ஆம் மந்திரம் கூறியது. அந்த ஒளிக்கு அப்பால் என்ன உள்ளது என்பது பற்றி இனி தொடரும் மந்திரங்கள் விளக்க உள்ளன.*

*இவைகள் வேதங்களில் காணப்படுகின்ற அற்புதமான உதாரணங்கள் ஆகும். இவை அனைத்தும் உயர் நிலை பிரார்த்தனைகள்.*

*ஒளிக்கு அப்பால் செல்வதற்கான இந்த முயற்சியே ஈசவித்யை எனப்படுகிறது.*

*பிரார்த்திப்பவனின் தகுதி, பிரார்த்தனைக்கான விஷயம், பிரார்த்திக்கும் விதம் அனைத்தையும் தெளிவாக இந்த மந்திரங்களில் காண்கிறோம்.*

*மேலும் இனி வரும் 16 – ஆம் மந்திரம் இந்தப் பிரார்த்தனையின் பலனைக் கூற உள்ளது. அதாவது ஒளிக்கு அப்பால் தாம் கண்டதை விவரிக்கிறார் இந்த உபநிஷத முனிவர்.*

***ஹிரண்மயேன பாத்ரேன ஸத்யஸ்யாபிஹிதம் முகம் |***
***தத் த்வம் பூஷன்னபாவ்ருணு ஸத்யதர்மாய த்ருஷ்ட்டயே || 15***

*15. உண்மையின் வாசல் தங்கம் போன்ற பொன்மயமான திரையால் மறைக்கப்பட்டுள்ளது. சூரியதேவா! நீங்கள் அதை சத்தியத்தின் தர்மத்தை அனுஷ்டிக்கின்ற நான் காண்பதற்காக திரையை விலக்குவாய்!*

***'இருளிலிருந்து என்னை ஒளிக்கு அழைத்துச் செல்வாயாக'***

*என்பது போன்ற பிரார்த்தனைகளை நாம் அறிவோம்.*

*இது இறைவனை நாடிச் செல்பவனின் ஆரம்ப பிரார்த்தனை. அவன் அறியாமை என்னும் இருளிலிருந்து ஒளிக்கு அழைத்து செல்லுமாறு இறைவனை பிரார்த்திக்கிறான்.*

*பிரார்த்தனை, ஜபம், தியானம் போன்ற பல்வேறு சாதனைகள் மூலம் அந்த ஒளியை காண்கிறான். அந்த ஒளியின் மென்மையையும், வசீகரத்தினையும் உணர்த்தவே பொன்மயமான திரை என்று இந்த மந்திரம் கூறுகிறது. அந்த மென்மையிலும், வசீகரத்திலும் அவன் தன்னை இழந்து அங்கேயே நிற்கிறான்.*

*ஆனால் உண்மை என்பது இருள் – ஒளி, துன்பம் – இன்பம் போன்ற அனைத்து இருமைகளையும்*

*கடந்தது. எனவே உண்மையை உண்மைப் பொருளை உள்ளது உள்ளபடியே அறிய வேண்டுமானால் அவன் ஒளியையும் கடந்து சென்றாக வேண்டும்.*

*அந்த ஒளி எவ்வளவுதான் இன்பம் தருவதாக இருந்தாலும் அவன் அதைக் கடந்து சென்றேயாக வேண்டும். அதற்காக இறைவனைப் பிரார்த்திக்கும் மந்திரம் இது.*

*அறியாமை இருளில் உழல்கின்ற ஒருவன் ஜபம், தவம், வழிபாடு, தியானம் போன்ற சாதனைகளின் மூலம் ஒளிமயமான, தங்கமயமான இறைக்காட்சியைப் பெற முடியும்.*

*ஆனால் அதனைக் கடந்து செல்வதற்கு நமது முயற்சிகள் எதனாலும் இயலாது. அங்கே இறையருள் ஒன்றே செயல்பட முடியும். எனவேதான் இறைவனை நோக்கி பிரார்த்திக்கிறான்.*

*உயர் நிலை பிரார்த்தனையைச் செய்வதற்கான தகுதியையும் இந்த மந்திரத்தில் நாம் காண்கிறோம். 'சத்திய நிஷ்டை உடையவன் நான்' என்று தனது தகுதியை இங்கே அந்த முனிவர் குறிப்பிடுகிறார்.*

*உண்மையில் உண்மைப்பொருளாகிய இறைவனில் நிலை நிற்கின்ற, இறைவனைச் சரணடைந்த வாழ்க்கை இங்கே குறிப்பிடப்பட்டுள்ளது. உலகப்*

*பொருட்களின் மீது பற்று இல்லாமல், இறைவன் ஒருவரையே நம்பி வாழ்கின்ற ஒருவர் செய்கின்ற பிரார்த்தனை இது.*

*எங்கும் இறைவன் இருக்கின்றார் என்ற கருத்துடன் கடமைகளை சிறப்பாகச் செய்வது சிறந்த வாழ்க்கைக்கான வழி. வாழ்க்கை எதுவாக இருந்தாலும் அக வாழ்க்கையை நாடுவதும், ஆன்மாவை தேடுவதும் மிக முக்கியமானவை.*

*இதுவரை ஒளியின் காட்சி, உயர் நிலை சாதனை, ஒளிக்கு அப்பால் செல்ல பிராத்தனை என்று படிப்படியாக கூறிவந்த இந்த உபநிஷதம் இங்கே அந்த பிராத்தனையின் பலனைக் கூறுகிறது.*

***பூஷன்னேகர்ஷே யம ஸூர்ய ப்ராஜாபத்ய வ்யூஹரச்மீன் ஸமூஹ தேஜோ யத் தே ரூபம் கல்யாணதமம் தத் தே பச்யாமி| யோऽஸாவஸௌ புருஷ: ஸோऽஹமஸ்மி || 16***

16. *அனைத்து உயிர்களையும் பேணிக் காப்பவனே, தனியாகப் பயணிப்பவனே, அனைத்தையும் ஆள்பவனே, சூரியதேவா, பிரஜாபதியின் மகனே! உனது கிரணங்களை விளக்கிக்கொள். உனது பேரொளியை ஒடுக்கிக் கொள்வீராக! மகிமை வாய்ந்த உனது வடிவத்தை உனதருளால் நான் காணவேண்டும். அந்தச் சூரியனில் இருப்பது நானே.*

*இறையருள் மட்டுமே வேண்டியது. அதற்காகவே ஒருவன் பிரார்த்திக்க வேண்டும்.*

*எல்லா உயிர்களும் முன்வினையின் படியே செயல்படுகின்றன, துன்புறுகின்றன. ஆனால் இறைவன் நினைத்தால், வினைப்பயனை அனுபவிக்க வேண்டிய காலத்தைக் குறைத்து ஒருவனுக்கு விரைவில் அனுபூதியை அளிக்க முடியும்.*

*ஒளிக்கு அப்பால் இருப்பது என்ன?*

*ஒளிக்கு அப்பால் தன்னையே கண்டதாக இந்த உபநிஷத முனிவர் கூறுகிறார்.*

*எவ்வளவோ முயற்சிகளுக்குப் பிறகு, ஆன்மீகச் சாதனைகளுக்குப் பிறகு, இறைக்காட்சிக்குப் பிறகு அறுதி நிலை அனுபூதியாக இந்த முனிவர் தம்மையே காண்கிறார்.*

*இதன் பொருள் என்ன?*

***'சூரியனில் இருப்பது நானே'*** *என்று இந்த உபநிஷதம் கூறுவதில் 'நான்' என்பதை நாம் என்று சாதாரணமாகப் புரிந்து கொள்ளக்கூடாது. பொதுவாக உடல் – மனச் சேர்க்கையே* ***'நான்'*** *என்று கூறுகிறோம். இந்த சாதாரண 'நான்' ஒளிக்கு அப்பால் இருக்க முடியாது. எனவே முனிவர்*

*கூறுகின்ற '**நான்**' என்பது உயர் நிலை '**நான்**' ஆன ஆத்மாவே ஆகும்.*

*இவ்வாறு ஒளிக்கு அப்பால் என்ன உள்ளது என்பதை அறிய முற்பட்ட முனிவர் 'அந்தப் பொருள் நானே' என்ற அனுபூதி பெறுகிறார்.*

*அனுபூதி பெற்று வாழ்க்கையின் இலட்சியத்தை அடந்துவிட்ட முனிவர்களை வசந்தகாலத் தென்றலுக்கு ஒப்பிடுகிறார் ஸ்ரீசங்கரர்.*

*'அமைதியும் மகிமையும் அடைந்துவிட்ட மகான்கள் இருக்கிறார்கள். தவழ்ந்து வரும் வசந்தம் போல அவர்கள் மனித குலத்திற்கு நன்மை செய்கிறார்கள். இந்த சம்சாரப் பெருங்கடலை அவர்கள் கடந்து விட்டார்கள். பிறரும் அவ்வாறே கடக்க வேண்டும் என்று துளிகூட தன்னலமின்றி பாடுபடுகிறார்கள். சூரியனின் சுடு கதிர்களால் பொசுக்கப்பட்ட பூமியை நிலவின் கிரணங்கள் குளிர்விப்பதைப் போல பிறரது துயரைக் களைவது ஞானிகளின் இயல்பாகிவிடுகிறது.'*

*அதுபோல இந்த உபநிஷத முனிவரும் அறுதி நிலையை அடைந்த பிறகு கருணைக் கண்களுடன் இந்த உலகைப் பார்கிறார். உலகம் என்னும் மாய வலையில் சிக்குண்டு மனிதர்கள் படுகின்ற துயரங்கள் அவரது கண்களில் தெரிகிறது. எனவே அவர்களை எல்லாம் அழைத்து வாழ்க்கையை ஒரு முறை சிந்திக்குமாறு கூறுகிறார்.*

*இந்த அறியாமை சேற்றிலிருந்து விடுபட்டு, அறிவொளி பெற்று, அந்த ஒளிக்கும் அப்பால் உள்ள உண்மையை உணர்வதற்கு இறைவனைப் பிரார்த்திப்பதை தவிர வேறு வழி இல்லை, எனவே பிரார்த்தனை செய்யுங்கள் என்று அழைக்கிறார் அவர்.*

***வாயுரனிலமம்ருதமதேதம் பஸ்மாந்தக்ம் சரீரம் |***
***ஓம் (3) க்ரதோ ஸ்மர க்ருதக்ம் ஸ்மர க்ரதோ ஸ்மர க்ருதம் ஸ்மர || 17***

17. *இந்த உடம்பு சாம்பலாகிவிடும். உடம்பிலிருந்து வெளியேறுகின்ற பிராணன் எங்கும் நிறைந்த அழிவற்ற பிராணனுடன் கலந்து விடும். ஓம் மனமே! செய்தவற்றை நினைத்துப் பார். மனமே இதுவரை செய்தவற்றை நினைத்துப் பார்.*

*ஒரு இலட்சியத்தை எடுத்துக்கொண்டு முன்னேறும் போது, சில வேளைகளில் நாம் இலட்சியத்தை மறந்துவிடுவதுண்டு. அதுபோல சிலவேளைகளில் இலட்சிய நாட்டம் நீர்த்துப்போவதும் உண்டு. எனவே தினமும் அதனை நினைவூட்டிக் கொள்வது நல்லது.*

*இது சுய தூண்டுதல் (Auto – Suggestion) எனப்படுகிறது. இத்தகைய மந்திரங்கள் நமது வேதங்களிலும் உபநிஷதங்களிலும் ஏராளமாக உள்ளன. அத்தகைய ஒரு மந்திரத்தினை முனிவர்*

நமக்கு தருகிறார். உபநிஷதங்களை படிக்கும் போது மட்டும் இல்லாமல் இவற்றின் பொருள் உணர்ந்து படிப்பது நாம் நமது இலட்சியத்தில் உறுதியாக இருக்க உதவும்.

இறைவனை நாடிச் செல்பவர்களோ, அல்லது சாதரண வாழ்க்கை வாழ்பவர்களோ, யாரானாலும் சரி வாழ்வின் நிலையாமையை அவ்வப்போது மனத்திற்கு எடுத்துக் கூறுவது நல்லது. இதனால் வாழும் வாழ்க்கையை நினைத்து பெரிதாக அலட்டிக்கொள்ள வேண்டியதில்லை என்ற உண்மை நம் மனதிற்கு உறுதிப்படுகிறது.

ஆண்டியும் சரி, அரசனும் சரி அனைவரின் உடம்பும் ஒரு நாள் சாம்பலாகி மண்ணுடன் மண்ணாகப் போகிறது. இதுவரை இந்த உடம்பையும், மனத்தையும் இயக்கிவந்த பிராணன் உடம்பிலிருந்து வெளியேறப் போகிறது. புலன்கள் ஒடுங்கப் போகின்றன. இதுவரை வாழ்ந்த வாழ்க்கை நம்மை விட்டு அகலப் போகிறது. என்ற இந்த உண்மையை ஒவ்வொரு நாளும் சிறிது நேரம் சிந்திப்பது வாழ்க்கைக்கு ஒரு புதிய கண்ணோட்டத்தை கொடுக்கும்.

இதுவரை நல்லது செய்யாவிட்டாலும் இனி செய்யவேண்டும், இதுவரை இறைவனை நாடாவிட்டாலும் இனி நாட வேண்டும் என்று உயர் வாழ்க்கைக்கு ஒரு தூண்டுதலை இத்தகைய சிந்தனை தரும். எனவேதான் இந்தப்

*பிரார்த்தனையை ஒரு சுய தூண்டுதலாக நாம் கொள்கிறோம்.*

### *வழி நடத்துவாய் இறைவா!*

======================

*நெருப்பைக் கண்டுபிடித்தது மனித வரலாற்றில் அது ஒரு முக்கியமான திருப்புமுனையாகக் கருதப்பட்டது. நெருப்பைக் கண்டு வியந்த மனிதன் மெல்ல மெல்ல அதை வழிபட ஆரம்பித்தான். கடைசியாக அதை எங்கும் நிறைந்த, எல்லாம் வல்ல இறைவனின் சின்னமாகவே வழிபடுவதை வேதங்களில் காண்கிறோம். அவ்வாறு அக்னி தேவனை இறைவனாகவே கொண்டு பிரார்த்திக்கின்ற மந்திரம் இது.*

*ஒளிக்கு அப்பால் உள்ள உண்மையைக் கண்ட முனிவர் அந்த உண்மையை நாமும் அடைய வேண்டும் என்ற பெருங்கருணையினால், இவ்வாறு பிரார்த்தனை செய்யுமாறு நம்மிடம் கூறுகிறார்.*

***அக்னே நய ஸுபதா ராயே அஸ்மான்***
***விச்வானி தேவ வயுனானி வித்வான் |***
***யுயோத்யஸ்மஜ்ஜுஹுராணமேனோ***
***பூயிஷ்ட்டாம் தே நம உக்திம் விதேம ||*** *18*

*18. அக்னி தேவனே, ஒளிப்பொருளே! எங்கள் எல்லா செயல்களையும் அறிபவன் நீ. வினைப்பயனை அனுபவிப்பதற்காக எங்களை*

*அனுபவப் பாதையில் அழைத்துச் செல். எங்களைக் கொடிய தவறுகளிலிருந்து விலக்கு. உனக்கு மீண்டும் மீண்டும் எங்கள் வணக்கங்கள்.*

*தம்மை அனுபவப் பாதையில் அழைத்துச் செல்லுமாறு பிரார்த்திக்கிறார் முனிவர்.*

*அனுபவப் பாதை என்பது என்ன?*

*செயல்கள் பலன்களைத் தருகின்றன. நற்செயல்கள் நல்ல பலன்களையும், தீய செயல்கள் தீய பலன்களையும் தருகின்றன. பலன்கள் வந்தால் அதை அனுபவித்தே ஆகவேண்டும்.*

*'இதுவரை செய்துள்ள செயல்களை அறிந்த இறைவனே! இனி புதிய செயல்கள் செய்து பலன்கள் வராமல், செய்தவற்றிற்கான பலனை அனுபவிப்பதற்காக மட்டும் எங்கள் வாழ்க்கை அமையட்டும்'*

*என்பது இந்த மந்திரத்தின் பொருள். இவ்வாறு இறைவனை நாடி ஒரு பிரார்த்தனை பூர்வமான வாழ்க்கையை நாம் நடத்த வேண்டும் என்ற குறிப்புடன் ஈசாவாஸ்ய உபநிஷதம் நிறைவு பெறுகிறது.*

***ஓம் தத் சத்***

